Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

**செல்வம்**

உழைப்பவர்களுக்கு முழு உரிமை கொடுத்தால்தான் உழைப்பெல்லாம் செல்வக் குவியலாக மாறும்,


-பேரறிஞர் அண்ணா

# அண்ணா


நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**தியாகம்**

தியாகம் என்பது பொதுநலத்துக் காகப் பாடுபடுவதே தவிர, சுயநலத்துக்கான பலனை எதிர்பார்த்ததல்ல.




-தந்தை பெரியார்

மலர்:7 சென்னை 14-3-83 திங்கள் வெளியீடு 15-3-83 செவ்வாய் இதழ்: 145

## மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற கொள்கையிலிருந்து

# கழகம் பின்வாங்கவில்லை

## கருணாநிதிக்கு புரட்சித்தலைவர் பதில்

**சென்னை, மார்ச். 14- மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் எனற கொள்கையிலிருந்து கழகம் பின்வாங்கவில்லை என்று கருணாநிதிக்குப் பதிலளித்து முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்**

### கேரளாவிலும் கடும் வறட்சி நிலைமை

திருவனந்தபுரம், மார்ச் 14—

கேரள மாநிலத்தில் 600 கிராமங்களில் கடும் வறட்சி ஏற்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

வறட்சி நிலவரம் குறித்து முதல்வர்கருணாகரன் தலைமையில் அமைச்சரவை கூடி இன்று ஆலோசனை நடத்தியது

பல கிராமங்களில் குடிதண்ணீர் இன்றி மக்கள் அவதிப்படுவதாக கூறப்படுகிறது.

சட்டசபையில் இன்று நிதி நிலை அறிக்கை மீது தி.மு.க. தலைவர் கருணாநிதி பேசும்போது மாநில சுயாட்சி பற்றி குறிப்பிட்டார். கொச்சியில் முதல்வர் புரட்சித தலைவர் நிருபர்களுக்குப் பேட்டி அளிக்கும்போது மாநில சுயாட்சியை ஆதரிக்க வில்லை என்ற கருத்தை கூறியிருப்பதாக இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் செய்தி வந்திருக்கிறது என்று கருணாநிதி கூறினார்.

### முதல்வர் பதில்

முதல்வர் புரட்சித் தலைவர் குறுக்கிட்டு பதிலளித்துக்கூறியதாவது:—

கொச்சியில் நான் நிருபர்களிடம் கூறுகையில் மாநில சுயாட்சி என்பது பிரிவினை என்கிற அளவுக்கு விளம்பரப் படுததப் பட்டுள்ளது. எனவே அந்த நிலையை நாங்கள் ஆதரிக்க வில்லை என்று தான் கூறியிருந்தேன்.

கருணாநிதி:- நீங்கள் சொல்வது இந்து பத்திரிக்கையில் வந்துள்ளது. (மாநில சுயாட்சி பிரிவினை என்ற கருத்தில் கூறப்படுவதால் அதனை ஆதரிக்கவில்லை என்று புரட்சித்தலைவர் கூறியதாக இந்துவில் வந்த செய்தியை கருணாநிதி வாசித்தார். பின்னர் நாவலர் முன்பு எழுதிய ஒரு புத்தகத்தின் முன்னுரையையும் கருணாநிதி வாசித்தார்)

முதல்வர் புரட்சித் தலைவர்:- நான் பேசிய பேச்சிற்கு அவரே விளக்கம் தந்ததற்கு நன்றி. தனியாட்சி என்று நாங்கள் பேச விரும்ப வில்லை. ஆனால் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற கொள்கையிலிருந்தும் கழகம் பின் வாங்க வில்லை.

இவ்வாறு முதல்வர் புரட்சித தலைவர் கூறினார்,

கருணாநிதியின் பேச்சுக்கு மற்றொரு கட்டத்தில் பதிலளித்து முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:

அதிக அதிகாரங்கள் அடங்கிய தன்னாட்சி உரிமையை எங்கள்கழகம் நிச்சயம் விரும்புகிறது. ஆனால் நாட்டுப் பிரிவினை அடங்கிய எந்தக் கொள்கையையும் நாங்கள் எதிர்க்கிறோம்.

இவ்வாறு முதல்வர் கூறினார்,

### ரகுமான்கான்: சபாநாயகர் எச்சரிக்கை

சென்னை. மார்ச் 14— சட்டசபையில் இன்று ஹாஜா செரீப் பேசிக்கொண்டிருக்கும் போது இடையிடையே குறுக்கீடுகள் ஏற்பட்டன.

திடீரென்று ரகுமான் கான் (திமுக) எழுந்து ஒழுங்குப் பிரச்சினை என்று குறிப்பிட்டு பேச அனுமதி கேட்டார், தலைவர்கள் பேசுகிறார்கள் நீங்கள் பேச இப்போது அனுமதிக்க முடியாது என்று சபாநாயகர் கூறினார். ஆனால் ரகுமான்கான் உட்காராமல் தொடர்ந்து "ஒழுங்குப் பிரச்னை ஒழுங்கு பிரச்சினை" என்று உரக்கக் கத்திக்கொண்டு இருந்தார்.

உடனே சபாநாயகர் பேச அனுமதிக்க முடியாது. உட்காராமல் நீங்கள் இப்படி செய்து கொண்டிருந்தால் நான் வேறு மாதிரியாக நடவடிக்கை எடுக்க நேரிடும் என்று எச்சரித்தார்.

### வறட்சி பணிகளுக்கு

# ரூ. 217 கோடி கொடுங்கள்

### மத்திய அரசுகு தமிழகம் கோரிக்கை

**சென்னை. மார்ச் 14- தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிகளுக்கு 217 கோடி ரூபாய் தேவைப்படுகிறது என்று மத்திய அரசிடம் கோரியிருப்பதாக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.**

நிதிநிலை அறிக்கை மீதான விவாதத்திற்குப் பதில் அளித்து சட்டசபையில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் பேசியதாவது:-

இந்த விவாதத்தின்மீது 58 பேர்கள் கலந்து கொண்டு தங்களின் கருத்துக்களை வழங்கி இருக்கிறார்கள்.

எதிர்க்கட்சித் தலைவர்களும் உறுப்பினர்களும் சில பகுதிகளுக்கு ஆதரவு காட்டி இருக்கிறார்கள்,

சிலபகுதிகளை நடைமுறைப்படுததும் வழிகளை எடுத்துக் கூறியிருக்கிறார்கள்,

எதிர்க்கட்சி தலைவர் பல கருத்துக்களைச்சுட்டிக்காட்டி இருக்கிறார். தன்னாட்சிக் கொள்கைக்கு உறுதுணையாக கருத்துக்களை வெளியிட்டு இருக்கிறார்,

பட்ஜெட்டில் எதுவுமே இல்லை என்று கூறி சிலர் தங்கள், தங்கள் பாணியிலேயே எடுத்துச் சொன்னார்கள்.

அதைத்தான் அவர்களிடம் நாம் எதிர் பார்க்க முடியுமே தவிர வேறு எதுவும் எதிர் பார்க்க முடியாது.

இழித்தும், பழித்தும், கேலியும், கிண்டலுமாக தங்கள் தங்கள் பாணியிலேயே வழங்கியவர்கட்கு நான் அவர்கட்கே அதைத திருப்பித்தந்து அவர்களது அய்யவினாக்களுக்கு மட்டும் பதில் அளிக்கிறேன்.

நாட்டில்இப்போதுள்ள தண்ணீர் தட்டுப்பாடு, மின்சாரப் பற்றாக்குறை ஆகிய எதையும் மறைக்காமல், உள்ளது உள்ள படியே நிதிநிலை அறிக்கையில் எடுத்துக்கூறி இருக்கிறோம்.

அதற்குக் காரணம் எதிர் காலத்திலே திட்டங்களை வகுப்பதற்கு இது உறுதுணையாக இருக்கும்

(2-ம் பக்கம் பார்க்க

### காவிரி பிரச்னை பற்றி

# மத்திய அமைச்சருடன் புரட்சித்தலைவர் பேச்சுவார்த்தை

### பெங்களூரில் நடக்கிறது

**சென்னை. மார்ச் 14. காவிரி பிரச்னை குறித்து மத்திய நீர்ப்பாசன அமைச்சருடனும். கர்நாடக முதல்வருடனும் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் பேச்சு நடத்த இருக்கிறார்.**

இந்தத் தகவலை சட்ட மேலவையில் அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

சட்ட மேலவையில் நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித்தலைவர் ஏ. ஆர். நல்லசிவம் கலந்து கொண்டு பேசினார். அப்போது அவர் காவிரி நீர் பிரச்னை முறையாகத் தீர்க்கப்பட வேண்டும் மழை பெய்யும் வரை வீராணம், கட்டளைக் கால்வாய், கிருஷ்ணா நதிநீர் என்றெல்லாம் பேசுகிறீர்கள். மழை பெய்ததும் குடிநீர் பிரச்சினையை விட்டு விடுகிறீர்கள் என்று குறிப்பிட்டார்.

காவிரிநீர் பிரச்னையில் தி. மு. க. ஆட்சியின் போது கருணாநிதி 100 டி. எம். சி. தண்ணீர் குறைத்து அனுப்ப ஒப்புக் கொண்டார். அந்தப் பிரச்னையை மேலும் தொடர்ந்து 50 அல்லது 75 டி.எம்.சி. தண்ணீர் என்றாவது பிரச்னையைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று அன்றைய தலைமைப் பொறியாளர் மணவாளன் ஒரு அறிக்கை சமர்ப்பித்து இருப்பதாக எனக்குத தகவல் கிடைத்துள்ளது என்று கூறினார்,

அமைச்சர் ராஜா முகமது: காவிரி நீர் பிரச்னை. முக்கியமான பிரச்சினை. ஒரு முக்கிய கட்சித் தலைவர் ஏதோ தலைமைப் பொறியாளர் அறிக்கை கொடுத்திருப்பதாகச் சொல்கிறார். ஏதோ ஒரு சந்தர்ப்பத்திற்காக அப்படிச் சொல்கிறார் என்று தெரிகிறது நாங்கள் சந்தர்ப்பவாதிகள் அல்ல.

நல்லசிவம்: அசாமில் தேர்தல் வந்தபோது அந்தத் தேர்தல் நடக்கக் கூடாது என்று ஒரு சில மாநிலங்களில் எதிர்ப்பு எழும்பியது. ஆனால் தேர்தல் நடைபெறட்டும் என்று மேற்கு வங்கம் கூறியது. எதற்காக இப்படிக் கூறுகிறேன் என்றால் நீங்கள் சந்தர்ப்பவாதத்திற்காக இப்படிச் சொல்கிறீர்கள் என்பதற்காகத் தான் இதனைக் குறிப்பிடுகிறேன்.

அமைச்சர் ராஜா முகமது:- இப்போது இருப்பதெல்லாம் கிருஷ்ண சாகரிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதில் நவீனப் படுத்துவதன் மூலம் எவ்வளவு நீரைச்சேமிக்க முடியும், அதனை எப்படி பகிர்ந்து கொள்வது என்பதில் தீர்வுகாணவேண்டியிருக்கிறது. எவ்வளவு தண்ணீர் விட வேண்டும் என்பதிலும் ஒரு பிரச்னை எழுந்துள்ளது. கடந்த 50 ஆண்டுகளில் எவ்வளவு தண்ணீர் வந்துள்ளது? அதனை அடிப்படையாகக் கொள்வதா? அல்லது 75 ஆண்டுகளாக எவ்வளவு தண்ணீர் விடப்பட்டது என்பதை அடிப்படையாக எடுத்துக் கொள்வதா

(2-ம பக்கம் பார்க்க)

தலைமைக் கழக அறிக்கை எண் 13/83

## சென்னை மாவட்ட கழக தோழர்களுக்கு

கழகத்திலிருந்து நீக்கி வைக்கப்பட்ட

**தி. நகர் மூர்த்தி**

(தி. நகர்பகுதி செயலாளர்)

தன்னுடைய செயலுக்கு வருந்தி தன்னை மீண்டும் கழகத்தில் இணைத்துக் கொள்ள வேண்டும் என்று நேரிலும், கடிதம் மூலமும் கொடுத்த வேண்டுகோளை ஏற்று, அவர் இன்று முதல் கழகத்தில் இணைந்து முன்பிருந்த பொறுப்பிலேயே பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச்செயலாளர் திருமிகு ப.உ.ச. அவர்களின் அனுமதியுடனும் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**என். ராஜாங்கம்**
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை 14
14—3—83

### சிவ. இளங்கோ கோர்ட்டில் சரண் அடைந்தார்

திருவண்ணாமலை, மார்ச் 14— என். ஜி. ஓ. சங்கத் தலைவர் சிவ. இளங்கோ திருவண்ணாமலை சப்டிவிஷன் ஜுடிஷியல்மாஜிஸ்திரேட்கோர்ட்டில் சரண் அடைந்தார்.

கடந்த ஆண்டு டிசம்பர் 10-ம் தேதி நடந்த சம்பவம் குறித்து சிவஇளங்கோ மீது போலீஸ் வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.

இந்த வழக்கு தொடர்பாக அவர் சரண் அடைந்தார்.

ஜாமீனில் விடப்பட்ட அவர் மார்ச்26ம் தேதிநீதி மன்றத்திற்கு வர உத்திர விடப்பட்டது.

## நுழைவு வரியிலிருந்து சில பொருட்களுக்கு

# வரி விலக்கு

## நிதியமைச்சர் நாவலர் அறிவிப்பு

## வேலைவாய்ப்பை பெருக்க அரசின் புதிய திட்டங்கள்

**சென்னை, மார்ச் 14- வரவு செலவுத் திட்டத்தில் அறிவிககப்பட்ட நுழைவு வரியிலிருந்து சில பொருட்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டிருப்பதாக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.**

சட்டசபையில் நடந்த பட்ஜெட் விவாதத்துக்கு பதிலளித்து நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:—

நுழைவு வரியை எங்கே பிடித்தீர்கள் என ஹாஜா செரீப் கேட்டார்,

இ. காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் உள்ளது தான், கர்நாடகம், மராட்டியம், ஓரிசா, உள்ளிட்ட 12 மாநிலங்களில் இந்த வரி உள்ளது.

இந்த வரி பிற மாநிலங்களில் அதிக அளவில் உள்ளது.

எல்லா நகரங்களுக்கும் போட்டிருக்கிறார்கள் இங்கே நாம் 16 நகரங்களுக்கு 13 பொருட்களுக்கு போட்டுள்ளோம். போட வேண்டும்என்று விருப்பம் இல்லை. ஆனால் வேறு வழியில்லை.

மத்திய அரசு ரூ. 240 கோடிக்கு இங்கே வரியைப் போட்டுள்ளது.

அதற்கு எதிர்ப்பு இல்லை. கடையடைப்பு இல்லை ஆனால் வேறு வழி இன்றி ரூ. 20 கோடிக்கு வரி போட்டதை எதிர்க்கிறார்கள். எனவே அனைவரின் கருத்தையும் ஏற்று நுழைவு வரியில் இருந்து கீழ்க்கண்ட பொருட்களுக்கு விலக்கு அளிக்கப்படுகிறது. மண்எண்ணை சர்க்கரை மின்சார பல்பு முதலிய வீடுகளுக்கு பயன்படுத்தப் படும் பொருட்கள். (இது பற்றிய விவரங்கள் பின்னர் வரும்.) மற்றும் சித்த மருந்து, யுனானி மற்றும் அரிஸ்டம் போன்ற வகைகளுக்கும் விலக்கு அளிக்கப படுகிறது,

கைத்தறித் துணி கைத்தறிப் பட்டு கதர் ஆகியவைகளுக்கும் விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. விவரங்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

ஒவ்வொருநகரங்களிலும் வரி போடப்படும் என்பது தவறுஒரு கட்டத்தில் ஒரு இடத்தில்மட்டும் போடப் படும.

இன்னும் கூட வலியுறுத்தினால் பேச்சு நடத்தவும் அரசு தயாராக உள்ளது. ரூ. 240 கோடி வரி போட்ட மத்திய அரசை எதிர்க்காமல் 20 கோடி வரி போட்ட தமிழக அரசைஎதிர்ப்பது ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி என்பது போல் உள்ளது.

(பின்னர்குடியரசுகட்சி தவிர மற்ற எதிர்கட்சிகள் வெளிநடப்பு செய்தனர்)

நாவலர் தொடர்ந்து: மாநிலத்தில் நிதிநிலைமையை காக்க வேண்டியகடமை, பொறுப்பு அரசுக்கு உள்ளது.

### தனிஇன்சூரன்ஸ் அமைப்பு

இந்த வரி போட்டதில் அக்கிரமம் இல்லை. பல மாநில அரசுகள் தனியாக இன்ஸ்சூரன்ஸ் நடத்துகின்றன. அதே போல தமிழக அரசு தனி இன்ஸ்சூரன்ஸ் அமைப்பு ஏற்படுத்தும். இதன் மூலம் அரசுக்கு அதிக வருமானமும், வேலை வாய்ப்பும்கிடைக்கும்.

சத்துணவுத் திட்டத்திற்காக தனி பரிசு சீட்டு வாராவாரம் நடத்தப்படும் இதன் மூலம் கூடுதல் வேலை வாய்ப்பு ஏற்படும்.

கூட்டுறவுக் கடைகள் ரேஷன் கடைகள் ஆகியவற்றை கண்காணிக்க பணியாளர்கள் நியமிக்கப்படுவார்கள்

### குடும்பத்தில் ஒருவருக்கு வேலை

மேலே கூறிய வேலை வாய்ப்புகள் அனைத்தும் குடும்பத்திற்கு ஒருவருக்கு வேலை

(2-ம் பக்கம் பார்க்க)

## காவிரிப் பிரச்சினை...

1-ம் பக்கத் தொடர்ச்சி)

என்ற விபரங்கள்- பேசித் தீர்க்கப்படவேண்டியவை நவீனப்படுத்துவதன் மூலம் வரும் 15 ஆண்டுகளுக்கு எவ்வளவு நீரை சேமிக்க முடியும்? அதனையும் கணக்குப்பார்க்க வேண்டியிருக்கிறது. மத்திய அரசு இதனைத் தீர்மானிக்க வேண்டும்.

கர்நாடக முதல் அமைச்சர் முதல்வர் புரட்சித் தலைவருக்கு அழைப்பு அனுப்பியிருக்கிறார். மத்திய நீர்ப்பாசனத் துறை அமைச்சரை கர்நாடகத்திற்கு வரும்படி அழைத்து இருப்பதாகவும் அப்போது முதல்வர் புரட்சித் தலைவரும் வரவேண்டும் என்றும் அழைப்பு அனுப்பியிருக்கிறார். இந்தக் கூட்டம் இம் மாதம் 24, 25 தேதிகளில் பெங்களூரில் நடைபெற இருக்கிறது. முதல்வர் புரட்சித் தலைவரும் அந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளஒப்புதல் அனுப்பியிருக்கிறார். மற்ற மாநிலங்களும் அந்தக்கூட்டத்தில் கலந்து கொள்வது நல்லது.

நல்லசிவம்: காவிரி நீர் பிரச்னையை எப்படித் தீர்ப்பது என்று புரியாமல் இருக்கிறீர்கள். பூனைக்கு யார் மணி கட்டுவது என்பதுதான் இப்போது பிரச்னை. தஞ்சை மாவட்டத்தில் விவசாய நிலங்களுக்குத் தண்ணீர் இல்லை. தரிசாகக்கிடக்கின்றன.

## எலியல்ல புலி

அமைச்சர் ராஜா முகமது: பூனைக்கு மணி கட்டுவதற்கு எலிகள் தான் பயப்படும். அந்தப் பயம் புலிகளுக்கு இல்லை. முதல்வர் புரட்சித் தலைவர் காவிரி நீர்ப் பிரச்னையில் மிகவும் அக்கறை கொண்டு எப்படியெல்லாம் அவர் பேசி வருகிறார் என்பதனை அனைவரும் அறிவார்கள். தஞ்சை மாவட்டத்தில் உள்ள 30 லட்சம் ஏக்கர் நிலத்தில் ஒரு ஏக்கர் நிலம் கூட தண்ணீர் இல்லாது விடமாட்டோம். காவிரிப் படுகையில் நீர் இல்லாமல் எந்த நிலமும் வாடி விட இந்த அரசு விட்டு விடாது.

காவிரிநீர்பிரச்சினையில் அனைத்துக் கட்சிகளும் ஒரே குரலைத்தான் எழுப்பி இருக்கின்றன.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

8.ம் பத்தி தொடர்ச்சி

பற்றி குறிப்பிட்ட நாராயண்குமார் பெண்களின் நலன் பாதுகாக்கப்பட வேண்டும் எனக் குறிப்பிட்டார்.

சபையில் இவ்வாறு பெண்ணை அழைத்து வந்தது தவறானது என, ஆளும் கட்சி உறுப்பினர்களும், எதிர்க்கட்சி உறுப்பினர்களும் கூறினர்.

துணை சபாநாயகர் வீரண்ணா, உறுப்பினர் இந்தப் பிரச்சினையைக் கிளப்ப பல வழிகள் இருந்தும், இவ்வாறு செய்தது தவறானது. ஆகவே உறுப்பினர் நாராயண்குமார் வருத்தம் தெரிவிக்கவேண்டும் என்றார்.

பின்னர் உறுப்பினர் வருத்தம் தெரிவித்ததையடுத்து சபையில் ஏற்பட்ட பரபரப்பு அடங்கியது.

6-ம் பத்தி தொடர்ச்சி)

விட்டார்கள்.

## மார்ச்சில்தான் முழு அறிக்கை தர முடியும்

இதை ஏன் சொல்கிறேன் என்றால் பிப்ரவரி மார்ச் மாதத்தில் தான் முழு அறிக்கை தர முடியும்.

நாம்வறட்சிநிவாரணப் பணிகளுக்காக ரூ. 190 கோடி தர வேண்டும் என்றோம்.

இப்போது ரூ.217 கோடியே 79 லட்சம் வேண்டும் என்று மாற்றி மத்திய அரசுக்கு அனுப்பி இருக்கிறோம். 20 ஆயிரம் ஆழ்க்கிணறுகள் அமைக்க ரூ.80 கோடி கேட்டு இருக்கிறோம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

# அரிசி ஒதுக்கீடு: ஓரவஞ்சனை காட்டுவதா?

### மத்திய அரசுக்கு கரூர் சின்னசாமி எம். எல். ஏ. கேள்வி

சென்னை, மார்ச் 14. தமிழகத்திற்கு அரிசி ஒதுக்கீடு செய்வதில் மத்திய அரசு ஓரவஞ்சனை காட்டுவதாக சட்டசபையில் கரூர் சின்னசாமி பேசுகையில் கூறினார்.

தமிழக அரசின் நிதி நிலை அறிக்கை மீது நடந்த விவாதத்தில் கலந்துகொண்டு பேசுகையில் கழக உறுப்பினர் கரூர் சின்னசாமி கூறியதாவது:-

இந்த நிதிநிலை அறிக்கையானது தமிழ் நாட்டிலே பருவமழை பொய்த்து விட்டதால் ஏற்பட்டிருக்கின்ற குடி தண்ணீர்த் தட்டுப்பாடு மின்சாரவெட்டு, அதற்கும் மேலாகத் தஞ்சை மாவட்டத்திலே ஏற்பட்டிருக்கின்ற விளைச்சல் பாதிப்பு ஆகிய இப்படிப் பட்ட ஒரு சோதனையான கட்டத்திலே ஏழை மக்களைப் பாதிக்காத அளவிலே, வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ள மக்களுடைய வாழ்விலேயும், மேம்பாட்டிலேயும் அக்கறை கொண்டு தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

## போர்க்கால வேகத்தில் நடவடிக்கைகள்

பருவ மழை இல்லாததாலே நிலத்தடி நீர் வற்றிப்போய் இன்றைக்கு தமிழக மெங்கும் குடி தண்ணீர்ப் பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது. அதையெல்லாம் போக்குகின்ற வகையில் போர்க்கால அடிப்படையிலே அரசு இயந்திரங்களை முடுக்கி விட்டு குடி தண்ணீர் கொடுப்பதற்கான பல் வேறு திட்டங்களையும் போட்டு குழாய்க் கிணறுகளைப் போட்டு அந்த வேலைகளை நிறைவேற்றி வருகிறது.

தமிழகத்தில் அரிசி பற்றாக்குறை இருக்கிற காரணத்தால் இங்கே முதலமைச்சர் புரட்சித் தலைவரும், நிதியமைச்சரும் பல்வேறு கட்டங்களில் மைய அரசை வற்புறுத்தியும் கூட ஒரு மாதத்திற்கு 80 ஆயிரம் டன் அரிசியும், 40 ஆயிரம் டன் கோதுமையும் கொடுத்தால்தான், தமிழகத்தினுடைய தேவையைப் பூர்த்தி செய்ய முடியும் என்று சொல்லியும் கூட மத்திய அரசு 10 ஆயிரம் டன் அரிசி-கோதுமையை அனுப்புவதாகக் கூறியுள்ளனர்.

மத்தியில் இருக்கிற அமைச்சர்கள் மத்தியத் தொகுப்புக்குத் தமிழ் நாடு அரிசி கொடுக்கவில்லை, அதனாலேதான் கொடுக்கவில்லை என்று சொன்னார்கள்.

## கேரளா தரவில்லை

கேரளாகூடத்தான் மத்திய அரசு தொகுப்புக்கு அரிசி கொடுக்கவில்லை. மத்திய அரசு என்றால் நடுநிலையோடு இருக்க வேண்டும். இதைப் பார்க்கும்போது மத்திய அரசு மைய அரசாக இல்லாமல் ஒரு ஓரவஞ்சனை கொண்ட அரசாக இருக்கிறது என்பதை இங்கே நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்,

ஆகவே இங்கே இருக்கிற மத்தியிலே ஆளும்கட்சியைச் சேர்ந்த மெம்பர்கள் அங்கே நமக்கு அரிசி கொடுக்கவேண்டுமென்று போராடுகிற முதலமைச்சரவர்களின் குரலோடு உங்களுடைய குரலையும் சேர்த்து ஒலிக்க வேண்டுமென்பதை இந்த சந்தர்ப்பத்திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்

நீங்கள் இனிமேலாவது டெல்லியிலே இருக்கிற மத்திய அமைச்சர்களிடம் தமிழகத்திற்கு வேண்டிய உரிமைகளைப்பெறுவதற்காக பாடுபட வேண்டுமே தவிர இங்கே இருக்கிற அரசை நீங்கள் குறை சொல்லிப் பேசக் கூடாதுஎன்பதைச்சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

## அருமையான திட்டம்

சத்துணவுத் திட்டத்திற்கு மாதந்தோறும், 17 ஆயிரம் டன் அரிசி தேவைப்படுகிறது. இந்த சத்துணவுத் திட்டத்தைப் பற்றி, இங்கே இருக்கிறவர்கள் எப்படி விமர்சனம் செய்தாலும்- இந்திரா காங்கிரஸ் கட்சியில் முதலமைச்சராக இருக்கிற குஜராத் மாநிலத்தின் முதலமைச்சர் இங்கே வந்து பார்த்து விட்டு இது ஒரு அருமையான திட்டம், இதுஏழைகளை வாழ வைக்கும் திட்டம். இந்தத் திட்டத்திற்காக எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை. நீங்கள் நிறைவேற்றுங்கள் என்று முதலமைச்சரைப் பாராட்டி விட்டு, அங்கேயும் அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதாக சொல்லி விட்டுப் போனார்.

## மத்திய அரசு உதவி

அப்படிப் பாராட்டப்படுகின்ற திட்டம் இந்தச் சத்துணவுத்திட்டம். இதில் ஏதோ தமிழக அரசுக்கு மட்டும் பங்கில்லை. மத்திய அரசுக்கும் இதிலே பங்கு இருக்கிறது. காரணம் நாம் எல்லோரும் ஒருமைப்பாட்டைப் பற்றிப் பேசுகிறோம். இந்த நாடு ஒன்றாக இருக்க வேண்டுமென்று எல்லோரும் விரும்புகிறோம். அப்படி இருக்க வேண்டுமென்று சொன்னால் சத்துணவுத் திட்டத்திற்கு மத்திய அரசு நிச்சயமாக பாதி நிதியைக் கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கரூர் தொகுதியைப் பொறுத்தவரை நொய்யல் ஆற்றுத் திட்டம் கால் நூற்றாண்டாக பேசப்பட்டு வந்தது. இன்றைக்கு அது உருப்பெறும் நிலையில் உள்ளது. அதை விரைவாக நிறைவேற்றித் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த நிதிநிலை அறிக்கையைப்பற்றி நேற்றைய தினம் பேசிய திமுகவைச் சேர்ந்த உறுப்பினர்பழனியப்பன் இதுராமாயணத்தில்வருகிறசுந்தரகாண்டமாக இல்லாமல அரிச்சந்திர புராணத்திலே வருகிற மயான காண்டமாக இருக்கிறது என்று சொன்னார். அவர்கள்இருக்கும் இடத்தைத்தான் அவர்கள் சொல்லியிருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்.

இவ்வாறு கரூர் சின்னசாமி பேசினார்.



## மத்திய அரசுக்கு கோரிக்கை

1-ம் பக்கத் தொடர்ச்சி

என்று கருதித்தான்.

மாநில மத்திய அரசு எப்படி இருக்கவேண்டும் என்று இதில் கூறி இருக்கிறோம்.

இந்த நிதிநிலை அறிக்கையில் சில பல நன்மைகளைச் சுட்டிக் காட்டி விகிதா சாரங்கள் பற்றியும் இங்கே எடுத்துக் கூறினார்கள்.

இத்தனை ஆண்டு காலம் எந்த அதிகாரிகளின் உறுதுணையோடு கடந்த கால அரசுகள் நிதிநிலை அறிக்கையை தயாரித்தார்களோ அதே அதிகாரிகள் துணையுடன்தான் இந்த நிதிநிலை அறிக்கையும் தயாரிக்கப்பட்டு இருக்கிறது.

இந்த அரசு கையாலாகாத அரசு. எதற்கெடுத்தாலும் மத்திய அரசை எதிர் பார்ப்பதா என்று பேசினார்கள். நமது அரசியல் அமைப்புச் சட்டமே மைய அரசை எதிர் பார்த்துத்தான் இருக்கிறது.

அவர்கள் நினைத்தால் இந்த அரசையே அவர்கள் எடுத்துக்கொள்ள முடியும்.

இந்தியாவில் உள்ள 22 மாநிலங்களுக்கும் சேர்த்துத்தான் மைய அரசு.

## மைய அரசிடம் கேட்பது ஏன்?

மாநில அரசு ஆளத் தனியாக மக்களோ மைய அரசு ஆள தனியாக மக்களோ இல்லை. ரூ.30 ஆயிரம் கோடியை மைய அரசு செலவிட ஏற்றுக்கொண்டு இருக்கிறது என்றால் அதில் ரூ 10 ஆயிரம் கோடியை எல்லா மாநிலங்களுக்கும் செலவிடுகிறது. மீதி மூன்றில் இரண்டு பங்கை மைய அரசு வைத்துக்கொண்டு இருப்பதால் தான் நாம் மைய அரசைக் கேட்க வேண்டி இருக்கிறது.

1972-73ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை தாக்கல் செய்தபோது கலைஞர் பேசுகையில் மத்திய அரசு வரம் தரும் கடவுள். மாநில அரசு வரம் கேட்கும் பக்தர்களாக இருக்கின்றன என்றார்.

அதனால்தான் நாம் அடிக்கடி மத்திய அரசைக் கேட்க வேண்டியதாக உள்ளது.

பற்றாக்குறை நிதி நிலை அறிக்கை என்பது எல்லா மாநில அரசுக்கும் உகந்ததாக ஆகிவிட்டது.

கடந்த ஒரு வாரகாலமாக எல்லா மாநில அரசுகளும் போட்டுள்ள நிதி நிலை அறிக்கை ஏறக்குறைய பற்றாக்குறையாக உள்ளது.

ஆந்திர மாநிலம் ரூ.115 கோடிக்கும், பீகார் மாநிலம் ரூ. 121 கோடிக்கும் பற்றாக்குறையாகப் போட்டு இருக்கிறது.

மாநில அரசை கையாலாகாத்தன்மை-எதையும் செய்யமுடியவில்லை என்கிறார்கள்.

## பாராட்ட வேண்டியவர்கள் பாராட்டியுள்ளனர்

இங்கே இருப்பவர்கள் பாராட்டாவிட்டாலும் யார் பாராட்ட வேண்டுமோ அவர்கள் பாராட்டி இருக்கிறார்கள் 13.7.82 அன்று மத்திய நிதி அமைச்சர் பிரணாப் முகர்ஜி தமிழக அரசு அதிகப் பற்று வாங்காத மாநிலமாக இருக்கிறது என்று பாராட்டி இருக்கிறார்.

அதேபோல் 13.10.82 அன்று ரிசர்வ் வங்கி கவர்னர் சென்னைக்கு வந்தபோது நிருபர்களிடம் தமிழக அரசு பொருளாதாரத்தில் வலுவுள்ள அரசாக இருக்கிறது என்று பாராட்டி இருக்கிறார்.

மற்ற மாநிலங்களைப் பார்க்கும்போது தமிழகம் முன்னேறி இருக்கிறது.

இந்தியாவில் அதிகப் பற்று வாங்காத மாநிலம் தமிழகம்தான். இந்த நிலை நீடிக்க வேண்டும் என்று அவர் கூறி இருக்கிறார்.

இந்த மாதம் 2-ம் தேதி வந்த ரிசர்வ் வங்கி கவர்னர் மன்மோகன்சிங் அதிகப்பற்று வாங்காத அரசு தமிழக அரசு என்று பாராட்டி இருக்கிறார்

புதிய 20 அம்ச திட்டத்தை தமிழகம் ஏற்றுக் கொண்டிருக்கிறது

## தமிழகம் முன்னணி

1982-ம் ஆண்டு டிசம்பர் மாதம் வந்த மத்திய அரசு குழு தமிழக அரசு செய்துள்ள 20 அம்ச திட்டப் பணிகளை ஆய்வு செய்து தமிழகம் இந்த திட்டத்தை நிறைவேற்றுவதில் முன்னணியில் இருப்பதாக பாராட்டி இருக்கிறது.

ஆனால் அடியோடு ஒன்றுமே நடைபெறவில்லை என்று சிலர் தவறாகக் கூறுகிறார்கள்.

அதேபோல சிறுபான்மையோர், தாழ்த்தப்பட்டோர் மத்தியகுழு தமிழகம் வந்தபோது பத்திரிகை நிருபர்களிடம் வட மாநிலங்களை விட தென்மாநிலங்கள் தாழ்த்தப்பட்டோர் பிற்படுத்தப் பட்டோர்க்கு நன்மை செய்து இருக்கிறது அதிலும் தமிழக அரசு முழு அளவில் செயல்படுகிறது என்பது நாங்கள் மக்களை சந்தித்ததன் மூலம் தெரிந்து கொள்ள முடிந்தது. தமிழக அரசைப் பாராட்டுகிறோம் என்று கூறி இருக்கிறது.

## உலக வங்கி பாராட்டு

அதே போல உலக வங்கி குழு இந்தியாவிலேயே 22 மாநிலங்களில் தமிழகம் மட்டுமே பெற்ற தொகையை சிறப்பாக செயல்படுத்தி இருக்கிறது என்று பாராட்டுக் கூறியிருக்கிறது.

கைத்தறி வளர்ச்சியில் தமிழகம் முன்னணியில் உள்ளது என்று மத்திய அமைச்சர் கூறி இருக்கிறார்.

கைத்தறி வளர்ச்சிக்காக ஒதுக்கப்பட்ட ரூ.111 கோடியில் தமிழகத்திற்கு ரூ. 51 கோடி அளிக்கப்பட்டு இருக்கிறது.

தமிழக கைத்தறி நெசவாளர்களின் திறன் பாராட்டுக்குரியது என்று அவர் சொல்லி இருக்கிறார்.

## சிறந்த முறையில் நிவாரணப் பணிகள்

வறட்சி நிலையைப் பொறுத்தவரை நிவாரணப்பணிகளை தமிழகம் சிறப்பான முறையில் செய்து வருகிறது.

1901 முதல் 1982வரை கடந்த 82 ஆண்டுகளில் வறட்சி 39 ஆண்டுகள் இருந்து இருக்கின்றன.

கொடுமை, கடுமையான ஆண்டுகள் 12 ஆண்டுகள். இது விட்டு விட்டு வந்திருக்கின்றன.

பெரிய — சுமாரான நிலையில் 27 ஆண்டுகள் வந்திருக்கின்றன.

இந்த ஆண்டில் மட்டும் வறட்சி திடீரென்று வந்து விட்டதல்ல.

வறட்சி முன்பே அறிவித்து விட்டு வருவதல்ல. இந்தியாவில் பருவநிலை பகுதிக்குப் பகுதி மாறும். தென்மேற்கு. வடகிழக்குப் பருவக்காற்றுகள் தான் தமிழகத்திற்கு மழையைத் தருவது.

இந்த மழையை எதிர் பார்த்த பிறகு தான் எந்தஅளவு வறட்சி பாதிப்பு இருக்கிறது என்று நாம் அறிக்கை தர முடியும்.

தமிழகத்தில் 60 சதவிகிதம் மழை பெய்து இருக்கிறது.

## ஒவ்வொரு மாதமும் அறிக்கை

மாதா மாதம் மழை பற்றிய அறிக்கையை அனுப்பிக் கொண்டே இருந்து இருக்கிறோம்.

வறட்சியில் பாதிப்பு பற்றி அதற்கு எவ்வளவு பணம் ஈடுகட்ட வேண்டி இருக்கும் என்பது பற்றி ஜனவரியில்தான் சொல்ல முடியும்.

1968—69-ல் வறட்சி ஏற்பட்டபோது 19-2-69ல் தான் அறிக்கை அனுப்பப்பட்டது.

69 மார்ச் இறுதியில் தான் குழு வந்து பார்த்தது.

9.4. 69ல் முழு விவரம் கிடைக்கப் பெற்று 17-4-69ல்தான் அறிக்கை பிரதமரிடம தரப்பட்டது

அப்போது ரூ. 22 கோடியே 24 லட்சம் கேட்கப்பட்டது.

இரண்டாவது குழு ஜூலையில் வந்தது.

அந்தக் குழு ரூ. 15 கோடியே 74 லட்சத்துக்குப் பரிந்துரை செய்தது.

மத்திய அரசு ரூ. 11 கோடியே 25 லட்சம் தந்தது.

மற்றவற்றை மாநில அரசு சமாளிக்க வேண்டிய நிலை வந்தது.

1974ம் ஆண்டு வறட்சி ஏற்பட்டபோது வருவாய் வாரிய அறிக்கை9.12.74ல் கிடைத்தது.

12.12.74ல் முதலமைச்சர் ஏற்றுக்கொண்டு இருக்கிறார்.

23-1-75ல் மத்திய அரசுக்கு அறிக்கை அனுப்பப்பட்டது.

மத்திய அரசு ரூ 7.5 கோடி ஒதுக்கியது. அதில் தான் தகராறு ஏற்பட்டது.

அதற்கு மேல் கொடுக்க மாட்டோம் என்று கூறி

1-ம் பத்தி பார்க்க

---

### கல்லிலிருந்து நார் உரிக்கலாம், ஆனால்

# மத்திய அரசிடமிருந்து அனுமதி பெறுவது கடினமாக இருக்கிறது

### ஹாஜாசெரீப் குற்றச்சாட்டுக்கு பண்ருட்டியார் சூடான பதில்

சென்னை, மார்ச் 14. கல்லிலிருந்து நார் உரிக்கலாம். ஆனால் மத்திய அரசிடமிருந்து அனுமதி பெற முடியாது என்ற நிலை இருந்து வருகிறது என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

சட்ட சபையில் இன்று இ. காங்கிரஸ் தலைவர் ஹாஜா செரீப் பேசும் போது மின்சார உற்பத்தியில் தமிழக அரசு அதிக அக்கறைகாட்டவில்லை யென்றும் மத்திய அரசிடம்போதிய உதவிகளைப் பெறவில்லை என்றும் குறிப்பிட்டார், அதற்கு பதிலளித்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:—

தமிழகத்துக்கு தேவையானவற்றையெல்லாம் மத்திய அரசிடம் கேட்டுள்ளோம் அவர்கள் கொடுக்கவில்லை அதை ஹாஜா செரீப் போன்றவர்களும் வாதாடி வாங்கித் தந்தால் நன்றாகயிருக்கும்,

## அனுமதி இல்லையே

மின்சார நிலையங்களுக்கு வேண்டிய எரிகலன் (காஸ் டர்பைன்) இறக்குமதி செய்ய மத்திய அரசிடம் அனுமதி கேட்டுள்ளோம். அவர்கள் அனுமதி தரவில்லை, அப்படி அவர்கள் தந்திருந்தால் மின்சாரப் பிரச்சினை கணிசமான அளவில் தீர்ந்திருக்கும். என்ன காரணத்தினாலோ அவர்கள் அனுமதி தரவில்லை.

ஹாஜாசெரீப்: உதவிகளைப் பெறுவதற்கு நாம் தான் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

## திரும்ப திரும்ப பேசிவிட்டோம்

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன்:— இது பற்றி நாங்கள் திரும்பத் திரும்பப்பேசிவிட்டோம். நேரிலும் கேட்டோம். கடிதங்களும் எழுதியிருக்கிறோம்.

கல்லிலிருந்துநார்உரிக்கலாம். ஆனால் மத்திய அரசிடமிருந்து அனுமதி பெற முடியாது என்கிற நிலைமை உள்ளது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார். பின் தொடர்ந்து ஹாஜா செரீப் பேசினார்.

---

### கற்பழிக்கப்பட்ட

## பெண்ணை கர்நாடக சட்டசபைக்கு கூட்டி வந்த எம். எல். ஏ.

பெங்களூர், மார்ச் 14- பெங்களூர் லால்பாகில் கற்பழிக்கப்பட்டதாக கூறப்படும் ஒரு பெண்ணை கர்நாடக மாநில சட்டசபைக்குள் கிராந்திரங்கா கட்சி எம். எல். ஏ. நாராயண்குமார் கூட்டி வந்ததை அடுத்து சபையில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

சபையில் கேள்வி நேரம் நடந்து கொண்டிருந்தபோது இச்சம்பவம் நடந்தது.

கற்பழிப்பு சம்பவம் 1-ம் பத்தி பார்க்க

## நாவலர் அறிவிப்பு...

1-ம் பக்க தொடர்ச்சி]

என்ற திட்டத்தை செயல்படுத்தும் வகையில் அமையும்,

வேலை வாய்ப்பு திட்டத்திற்கு ரூ 15கோடி போதுமா? எனக்கேட்டனர்,

இது ஒரே ஆண்டில் நிறைவேற்றும் திட்டம் அல்ல.

## இந்தத் திட்டம் தொடரும்

குடும்பத்தில் ஒருவருக்கும்வேலை இல்லாவிட்டால் ஒருவருக்கு வேலை வழங்கப்படும். இதற்கான நிதி கள் இனி வகுக்கப்படும், திட்டம் தொடர்ந்து நடைபெறும்.

சத்துணவு திட்டத்திற்கு கொடுக்கப்படும் தொகை மனிதசமுதாய வளர்ச்சிக்கான செலவுகள் ஆகும். ரஷ்யாவில் 10—ல் ஒரு பகுதி குழந்தைகள் நலத்திற்காக ஒதுக்கப்படுகிறது

நுழைவு வரியை நீக்கினால், அந்த அளவிற்கு வேறு வரியை போடுங்கள் என எல்.கே ஜா. கமிஷன் கூறியுள்ளது நுழைவு வரியை ஒழிக்கும் மாநிலங்களுக்கு மத்திய அரசு இழப்பீடு தரலாம்என்றகருத்தும்உள்ளது இப்போது நாம் வரியைக் கொண்டு வந்தாலும் பின்னர் அப்படி உதவி கிடைக்கும் போது நீக்கிக் கொள்ளலாம்.

இவ்வாறுநிதியமைச்சர் நாவலர் கூறினார்.

---

வாஞ்சிநாதன் பெயர்:

## மணியாச்சி ரயில்நிலைய பெயர் மாற்றம்: மத்திய அரசு மறுப்பு

சென்னை, மார்ச் 14- சட்டசபையில் கழக உறுப்பினர் கரூர் சின்னசாமியின் கேள்விக்கு பதில் அளிக்கையில் அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:—

மணியாச்சி ரெயில் நிலையப் பெயரை மாற்ற வேண்டும் என பொது மக்கள் அளித்த கோரிக்கையை 79-ம் ஆண்டு முதல்வர் மூலம் மத்திய அரசுக்கு தமிழக அரசு அனுப்பியது.

இதுபோன்ற சுதந்திரப் போராட்ட வீரர்கள், நிறைய பேர் உள்ளார்கள். ஒருவரின் பெயரை மட்டும் ஓரிடத்தில் வைத்துவிட்டு மற்றவர்கள் பெயரை வைக்காமல் இருப்பது சரியாக இருக்காது என மத்திய அரசு தெரிவித்தது.

மீண்டும் 81-ம் ஆண்டு கடிதம் எழுதினோம், அதற்கும் அதே பதில் தான் வந்தது.

இரு முறை பிரதமருக்கும் ஒரு முறை உள்துறை அமைச்சருக்கும் கடிதம் எழுதப்பட்டது.

முன்பு இருந்த பிரதமரும், இப்போதுள்ள பிரதமரும், ஒரே பதிலையே கூறினார்கள்.

உள்துறை அமைச்சரிடம்இருந்துவந்தபதிலும் அதே பதில்தான்.

53ம் ஆண்டிலேயேதனிப் பட்டவர்களின் பெயர்களை ரெயில்வே நிலையத்திற்கு வைக்கக் கூடாது என கொள்கை முடிவு உள்ளதாக கூறப்பட்டது.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்,

## 'அகனிஸ்டவ்': விசேஷ தள்ளுபடி

சென்னை, மார்ச் 14— வியாபார அபிவிருத்தியைக் கருத்தில் கொண்டு அக்னிஸ்டவ்விற்கு அதன் விற்பனையாளர்களான கறிம்பாய் நிறுவனத்தினர் ஒவ்வொரு ஸ்டவ்விற்கும் 5 ரூபாய் விசேஷ தள்ளுபடி வழங்குகின்றனர்.

3 லிட்டர் கொள்ளளவு கொண்ட இந்தஸ்டவ்வின் எரி பொருள் டாங்கின் உட்பாகம் விசேஷ ரசாயன கலவைபூச்சுடன் கூடியது. உஷ்ண இழப்பை தடுக்க பர்னர் விசேஷ அமைப்பு கொண்டதாக

(5ம் பத்தி பார்க்க)

(7-ம் பத்தி தொடர்ச்சி)

தப்ப ரூபாய் 40 ஆயிரம் தரவேண்டும்; இல்லையேல் சிறையில் கம்பி எண்ணத்தான் வேண்டும் என்று மிரட்டப்பட்டனர்.

சக்திக்கு ஏற்ற வகையில் பணத்தை திரட்டப் பட்டியல் தயாரிக்கப் பட்டது.

### மிரட்டி பணவசூல்

பணத்தைத் திரட்ட இரண்டுநாள் அவகாசம் தரப்பட்டது'

5-வதுநாள் அந்த மக்கள் கடன் வாங்கி, அத்தியாவசிய பண்டங்களை விற்று, நகைகளை விற்று மாடுகளை விற்று ரூ. 13,549 ஐத்திரட்டி போலீசாரிடம் தந்தனராம்.

இதன்பிறகு தான் இவர்களுக்கு போலீஸ் கொடுமையில் இருந்து விடுதலை கிடைத்தது.

இச்சம்பவம் குறித்து வெளியே புகார் சொன்னால் மீண்டும் சித்ரவதை நடக்கும் என்ற மிரட்டலோடு போலீசார் சென்றனர்,

### சஸ்பெண்ட்

இந்தக் கொடுமைச் சம்பவம் தொடர்பாக ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர், ஒரு கான்ஸ்டபிள் சஸ்பெண்ட் ஆகியுள்ளனர்.

இந்த சம்பவம் குறித்து மாஜிஸ்திரேட் விசாரணை நடத்த உத்தரவிடுவதாக ம. பி. முதல்வர் அர்ஜுன் சிங் உறுதி அளித்துள்ளார்.

இச்சம்பவம் குறித்து நீதி விசாரணை நடத்த அரசியல் கட்சிகள் கோரியுள்ளன.

காந்தி வழியில் கிராம முன்னேற்றம்:

## ரூ. 6 லட்சம் செலவில் கையால் செய்யும் காகித தொழிற்சாலை

அமைச்சர் எஸ்.என். ராஜேந்திரன் அறிவிப்பு

சென்னை. மார்ச் 14. காந்தி வழியைப் பின்பற்றி கிராம மக்கள் முன்னேற்றமடைய ரூ 6 லட்சம் செலவில் கிராமங்களில் கையால் செய்யும் காகிதத் தொழிற்சாலைகள் ஏற்படுத்த அரசு திட்டமிட்டிருக்கிறது என்று அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறினார்.

சட்ட மேலவையில் கேள்வி ஒன்றுக்குப் பதில் அளித்து பேசிய கதர், பொதுப் பணித்துறை அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறியதாவது:—

1977-ஆம் ஆண்டில் கதர் கிராமத் தொழில் வாரியம் மூலம் 2 லட்சத்து 30 ஆயிரம் போ தான் வேலை செய்து வந்தனர்.

கடந்த 5 ஆண்டுகாலத்தில்—புரட்சித்தலைவர் ஆட்சியில் இந்த எண்ணிக்கை 4 லட்சத்து 50 ஆயிரமாக உயர்ந்திருக்கிறது. ஆதிதிராவிடர்கள் மற்றும் ஏழை எளிய மக்களுக்கு வேலை வாய்ப்புக்களை புரட்சித் தலைவர் அரசு உருவாக்கியிருக்கிறது.

எஸ்.என். ராஜேந்திரன் கூறினார்.

### கிராம முன்னேற்றம்

காந்தியின் வழியில் கிராம மக்கள் முன்னேற்றம் அடைவதற்கான பல திட்டங்களை அரசு செயல்படுத்தி வருகிறது. இதில் லாபநோக்கு இல்லை. 25 பேர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் காகிதத் தொழிற்சாலைகள் மாவட்டங்களில் ஏற்படுத்தப்படவிருக்கிறது. இதற்கு சுமார் ரூபாய் 6 லட்சம் வரை செலவாகும். இப்படி கையால் செய்யும் காகிதத்தொழிற்சாலைகளை கதர் வாரியம் கிராமங்களில் ஏற்படுத்தும்.

இவ்வாறு அமைச்சர்

## மாவட்டம் தோறும் ஆய்வாளர் மாளிகை

சென்னை, மார்ச் 14— தமிழகத்தில் ரூபாய் 4 லட்சம் செலவில் மாவட்டந்தோறும் தாலுக்கா தலைமையகங்களில் ஆய்வாளர் மாளிகைகளை கட்ட அரசு திட்டமிட்டுள்ளது என்று அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் தெரிவித்தார்.

சட்ட மேலவையில் கேள்வி ஒன்றுக்குப் பதில் அளித்த பொதுப்பணித்துறை அமைச்சர் ராஜேந்திரன் கூறியதாவது:-

அரசு அலுவலகங்களுக்கான கட்டிடங்களை அரசே கட்டித்தர முயன்று வருகிறது. தனியார் கட்டிடங்களில் தற்போது சில அலுவலகங்கள் இருந்து வருகின்றன. சில இடங்களில் வசதி குறைவாகவும் உள்ளது. கூடுமானவரை வருவாய்த்துறை அலுவலக "காம்ப்ளக்ஸ்"களை அரசே கட்டித்தரமுயற்சி செய்து வருகிறது.

ஒவ்வொரு மாவட்டத்திலும் தாலுக்காதலைமையகம் உள்ள இடங்களில் ரூபாய் 4 லட்சம் செலவில் ஆய்வாளர் மாளிகைகளை கட்ட அரசு திட்டமிட்டுள்ளது.

குமரி மாவட்டம் குறுகிய மாவட்டம். அங்கே நாகர்கோயில்

(8-ம் பத்தி பார்க்க)

ம.பி யில் ஒரு கிராமத்தில் 5 நாள் போலீஸ் முற்றுகை:

## மக்களைக் கொடுமைப் படுத்தி பெண்களை நிர்வாணம் ஆக்கினர்

### ரூ. 13 ஆயிரம் லஞ்சம் பெற்ற அநீதி

போபால், மார்ச் 14. மத்தியப்பிரதேசத்தில் போலீசார் ஒரு கிராமத்தை 5 நாட்கள் முற்றுகையிட்டனர் மக்களை அடித்து நொறுக்கினர். பெண்களை நிர்வாணமாக்கி சித்ரவதைசெய்தனர்.

பல கொடுமை புரிந்த போலீசார் அந்த மக்களிடம் இருந்து ரூ. 13 ஆயிரம் லஞ்சம் பெற்றனர்.

மத்தியப் பிரதேசம் பிலாஸ்பூர்மாவட்டத்தில் கொர்பா என்ற இடத்தின் அருகே உள்ள கிராமத்தில் இந்தக் கொடுமை நடந்துள்ளது.

இந்தக் கிராமத்திற்குப் போலீசார் கடந்தமாதம் பிப்ரவரி முதல் தேதி சென்றனர்.

ஒரு கொலை வழக்கு சம்பந்தமாக போலீசார் புலன் விசாரணைக்குச் சென்றனர்,

அந்தக் கிராமத்தில் உள்ள பள்ளிக்கூடத்தில் கிராம வாசிகள் 60-க்கும் மேற்பட்டவர்களை போலீசார் இந்த இடத்தில் கூட்டினர்.

### குழந்தைகள்மீது காட்டுத்தர்பார்

புலன் விசாரணை நாடகம் தொடங்கியது. போலீசார் அந்த கிராம மக்களை ஈவு இரக்கம்இன்றி அடித்தனராம்.

குழந்தைகள் என்று பார்க்கவில்லை. 80 வயதுக்கிழவரைக்கூட போலீசார் விடவில்லை.

தாக்கியதாகக் கூறப்படுகிறது.

கொலையுண்டவர்களது உறவினர்கள் என்று சொல்லப்படும் 4 பேர்களை போலீசார் ஒரு அறைக்கு அழைத்துச் சென்று சித்ரவதை செய்தனராம்.

இவர்களைத் தலைகீழாக தொங்கவிட்டு எலக்ட்ரிக் ஷாக் தந்தனராம்.

இவர்களில் இருவரை நிர்வாணமாக ஆக்கி தகாதபடி நடத்தினார்களாம்.

### பெண்களை நிர்வாணமாக்கி கொடுமை

பெண்களையும் நிர்வாணமாக ஆக்கி கொடுமை செய்தனர். இவர்களது அணிவகுப்பு நடத்தப்பட்டதாம்.

இரண்டு குழந்தைகளின் தாய் அந்தக் குழந்தைகளது கண் எதிரிலேயே துகில் உரியப்பட்டாள். இது குறித்து அந்தப் பெண்மணி புகார் தெரிவித்துள்ளார்.

பள்ளிக்கூடம் போலீசாரின் சித்ரவதைக்கூடமாக மாற்றப்பட்டது.

கிராம மக்கள் சிலர் போலீசாருக்கு பயந்து காட்டில் 4 நாட்கள் ஒளிந்து இருந்தனராம்.

இந்தக் கொடுமையில் இருந்து கிராம மக்கள்

(1-ம் பத்தி பார்க்க)

16-ந்தேதி

## ஆவடியில் கழக பொதுக்கூட்டம்

சென்னை, மார்ச் 14— சென்னையை அடுத்த ஆவடி காமராசர் நகர் நெடுஞ்சாலையில் வருகிற 16-ந்தேதி மாலை கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

கவுரிசங்கர் தலைமையிலும், கிருஷ்ணதாஸ், அன்பழகன், ஆகியோர் முன்னிலையிலும், நடைபெறும் இக்கூட்டத்தில் கோ. விசுவநாதன் எம்.எல்.ஏ, காடுவெட்டி கண்ணப்பன் எம்.எல்.சி. ஜெகநாதன், புலவர் சோமுசா, ஆவடி குமார், கேசவன், முருகன், வெங்கடேசன், முரளி ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

## விவசாய உயர்மட்டக்குழு சிபாரிசை நிறைவேற்ற அரசு உறுதி

சென்னை. மார்ச் 14— விவசாயஉயர்மட்டக்குழுவின் சிபாரிசுகளை நிறைவேற்ற கழக அரசு தயாராக உள்ளது என்று அமைச்சர் காளிமுத்து சட்டசபையில் கூறினார்.

மார்க்சிஸ்ட் உறுப்பினர் வரதராஜன் கேட்ட நாராயணசாமி நாயுடு தலைமையிலுள்ள விவசாய சங்கமும் திமுக சங்கமும் ஏன் விவசாய உயர் மட்டக்குழுவில் இடம் பெறவில்லை என்ற கேள்விக்கு பதிலளித்த அமைச்சர், அழைத்தோம வரவில்லை, ஏன் வரவில்லை என்பதை அவர்களிடம் தான் கேட்க வேண்டுமென்று பதிலளித்தார்.

விவசாய சங்கங்கள் அனைத்தும் முழுமையாக ஈடுபட்டால்தான் விவசாயிகளின் பிரச்சினைகளை அரசினால் தீர்க்க முடியும் என்றும் அமைச்சர் கூறினார்.

மாத ஒதுக்கீடு 25 ஆயிரம் டன் போதாதாம்

## மத்திய அரசிடம் உணவு தானியம் கேட்டு புரட்சித்தலைவர் வழியில் உண்ணாவிரதம்

### மராட்டிய முதல்வர் சொல்கிறார்

பம்பாய், மார்ச் 14— மத்திய அரசிடமிருந்து அதிக அரிசி கோரி தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அடிச்சுவட்டைப் பின்பற்றி உண்ணாவிரதம் இருக்க விரும்புவதாக மராட்டிய சட்டமன்றத்தில் மாநில முதல்வர் பாட்டீல் தெரிவித்தார்.

மராட்டிய மாநில சட்டமன்றத்தில் உணவுப் பிரச்சினை பற்றிவிவாதம் நடந்தது. இந்த விவாதத்தின் போது முதல்வர் பாட்டீல் குறிப்பிட்டதாவது:—

மத்திய அரசு நமக்குப் போதுமான அரிசி தரவில்லை. இந்த மாதத்திற்கு மத்திய அரசு 25 ஆயிரம் டன் அரிசி மட்டுமே ஒதுக்கியிருக்கிறது.

வழக்கமாக 75 ஆயிரம் டன் உணவு தானியம் ஒதுக்கும். ஆனால் இந்த மாதம் 50 ஆயிரம் டன்னைக் குறைத்து 25 ஆயிரம் டன்தான் ஒதுக்கியிருக்கிறது.

தமிழக முதல்வர் உண்ணாவிரதப் போராட்டம் துவங்கி 10 ஆயிரம் டன் உணவு தானியம் பெற்றார்.

அதேபோல நானும் உண்ணாவிரதம் தொடங்கவிரும்புகிறேன். மராட்டிய மாநிலத்திற்கு இன்னும் அதிகமாக உணவு தானியம் ஒதுக்க வேண்டும் என்று கோரி உண்ணாவிரதம் இருக்க விரும்புகிறேன்.

இவ்வாறு மராட்டிய மாநில முதல்வர் பாட்டீல் சொன்னார்.

நாராயணன் குற்றச்சாட்டு:

## அரிசி - மின்சாரம் பற்றாக்குறைக்கு மைய அரசே காரணம்

சென்னை. மார்ச் 14. தமிழகத்தில் அரிசி. மின்சார பற்றாக்குறை ஏற்பட்டதற்கு மைய அரசுதான் காரணம் என்று பி. ஜி. நாராயணன் எம். எல். ஏ. குற்றஞ்சாட்டினார்.

சட்டசபையில் நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் கழக உறுப்பினர் பவானி பி. ஜி. நாராயணன் பேசுகையில் கூறியதாவது:—

பருவமழை தவறியதால் மிக கடுமையான வறட்சியால் தமிழகம் பாதிக்கப்பட்டு உணவு பற்றாக்குறை, மின்சாரத்தட்டுப்பாடு இவைகளை சமாளிக்க இந்த அரசு பெருமுயற்சி எடுத்துக்கொண்டிருக்கும்நிலையில் மைய அரசு நமது கோரிக்கையை ஏற்று ஓரளவுக்கு உதவியிருந்தால் வறட்சி நிலைமை இவ்வளவு கடுமையாக இருக்க நியாயமில்லை.

மின்சாரத் தட்டுப்பாட்டை போக்க நிலக்கரியை அனுப்பமைய அரசு தாமதம் செய்தது மட்டுமல்லாமல் நிலக்கரியை இறக்குமதி செய்து கொள்ள அனுமதியும் கொடுக்கவில்லை.

### மைய அரசின் தாமதம்

அதே போல் தான் அரிசியை அனுப்புவதிலும் மைய அரசு தாமதம் செய்து வருகிறது.

இப்படிப்பட்ட நிலைமைகளை சமாளிக்க மாநிலங்களுக்குப் போதிய அதிகாரங்கள் தேவைப்படுகிறது. இந்த நிதிநிலை அறிக்கையில் மத்திய மாநில அரசுகளின் உறவு முறை நிலையான அடிப்படையில் சீரமைக்கப்படவேண்டிய அவசியத்தையும் ஒருமைப்பாட்டிற்கு ஒத்த வகையில் போதிய அதிகாரங்களோடுகூடியதன்னாட்சி உரிமையை மாநிலங்கள் பெறவேண்டும் என்பதையும் சுட்டிக் காட்டியிருப்பது இந்த அரசு உரிமையை வற்புறுத்துவதில் எப்போதும் தயக்கம் காட்டாது என்பதை உணரவேண்டும்.

### நல்ல அம்சங்கள்

இந்த வரவு செலவு திட்டத்தில் பல நல்ல அம்சங்களை காணமுடிகிறது பல முற்போக்குத்திட்டங்களைப்பற்றி இந்த அறிக்கையில் சொல்லப்பட்டிருக்கிறது. மக்களுக்குப் பெரிதும் பயன்படக்கூடிய தன்னிறைவுத் திட்டம், குடும்பத்தில் ஒருவருக்கு வேலை கொடுக்கும் திட்டம், சத்துணவுத் திட்டம் போன்ற நல்ல திட்டங்களை செயல்படுத்தும்போது நிதி தேவைப்படுகிறது. ஆகவே வரி போடாததை உயர்வு என்றோ சிறப்பு என்றோ கருத முடியாது. அபிவிருத்தி திட்டங்களுக்கும் சமூக நலத் திட்டங்களுக்கும் தேவைப்படுகிற நிதிக்காக வரி போடுவது அவசியம்தான். ஆனால் யாருக்கு வரி போடுவது என்பதுதான் முக்கியம்.

26 கோடி ரூபாய் அளவில்வரிவிதித்திருந்தாலும் அது அடிமட்டத்திலுள்ள ஏழைஎளிய மக்களைப் பாதிக்கும் வகையில் இல்லை என்பதை சுட்டிக்காட்டகடமைப்பட்டிருக்கிறேன், ஏழை எளிய மக்கள் பயன் பெறும்வகையில் எல்லா வகைப்பட்ட மண்ணெண்ணை விளக்குகள், திரிகள், கண்ணாடி சிம்னி ஆகிய அனைத்திற்கும்முழுமையாக விற்பனைவரி ரத்து செய்திருப்பது வரவேற்கக் கூடிய அம்சமாகும்.

முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்திற்கு 134 கோடி ரூபாய் செலவாகும் எனக் கூறப்பட்டிருக்கிறது. இளமையில் 2 நாட்கள் தொடர்ந்து பட்டினிகிடந்ததால் அந்த பசியின் கொடுமையை இளம் வயதினில் அனுபவித்த நமது முதல்வர் புரட்சித்தலைவர், தான் அனுபவித்த கொடுமையை தமிழகத்திலுள்ள ஏழைக் குழந்தைகள் அனுபவிக்ககூடாது என்ற உணர்வில் இந்தக நல்ல திட்டத்தை செயல் படுத்தி வருகிறார்.

இந்த திட்டத்தை

(1-ம் பத்தி தொடர்ச்சி

அமைக்கப்பட்டிருக்கிறது.

மேலும்ஸ்டவ் வெடிப்பு போன்ற அபாயங்கள் இதில் ஏற்பட சந்தர்ப்பமில்லை. 1 லிட்டர் மண் எண்ணெய் மூலம் சுமார் 10 மணி நேரம் சமையல் செய்யலாம், இதன்மூலம் எரிபொருள் அதிக அளவில் மிச்சப்படுத்த முடியும். வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் ஒரே அழுத்தமில்லா (Non-pressure) ஸ்டவ் இதுதான்.

மேற்கண்ட தகவல்களை 'அக்னி ஸ்டவ்' தென்னிந்தியவிற்பனையாளர்களான கறிம்பாய் நிறுவனத்தினர் நிருபர்களிடம் விளக்கிக் கூறினர்.

அனைத்து தரப்பு மக்களும் வரவேற்கிறார்கள், குழந்தைகளை வாழ வைக்கும் இந்த நல்ல திட்டம் வெற்றிகரமாக செயல்பட ஆக்கபூர்வமான யோசனைகளை கூறாமல் ஒரு சிலர் குறை கூறிக் கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னால் அவர்கள் மனிதாபிமானம் இல்லாதவர்களாகத்தான் இருக்க வேண்டும்.

### வாழ்வு மலர...

கைத்தறித் துறையில் 5 கூட்டுறவு நூற்பாலைகள் தொடங்க திட்டமிட்டு இருப்பதும் நெசவாளர்களுக்கு உதவித்தொகை மற்றும் வீட்டு வசதி திட்டம் போன்ற அம்சங்களும் நெசவாளர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டுவதாக உள்ளது.

குடிசைகளுக்கு மின் விளக்கு போடும் திட்டத்தில் 5 லட்சம் குடிசைகள் இதுவரையில் மின்வசதி பெற்றுள்ளது என்றபுள்ளிவிவரம் இந்த அரசு ஏழை மக்களின் பேரில பற்றும் பாசமும்கொண்டு செயல்பட்டு வருகிறது என்பதை படம் பிடித்துக் காட்டும் நிதிநிலை அறிக்கையாக உள்ளது.

இவ்வாறு பி.ஜி, நாராயணன் கூறினார்,

அரிசி சப்ளையில் குறைப்பு இராது

## அரியானா, உ. பி., பஞ்சாபில் அரிசி வாங்க அதிகாரிகள் விரைவு

### தலைமைச்செயலர் பொறுப்பில் இருக்கும் சொக்கலிங்கம் பேட்டி

திருச்சி, மார்ச் 14- வெளி மாநிலங்களில் அரிசி வாங்குவதற்காக அரியானா, உத்திரப்பிரதேசம். பஞ்சாப் முதலிய மாநிலங்களுக்கு தமிழக அரசு அதிகாரிகள் சென்றுள்ளனர் என்று தலைமைச்செயலாளர் பொறுப்பை வகிக்கும் சொக்கலிங்கம் கூறினார்.

பொதுவினியோகஅரிசி சப்ளையில் குறைப்பு இராது என்றும் அவர் கூறினார்.

திருச்சி வந்த சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறியதாவது:—

தமிழகத்தைப் பொறுத்தவரை இந்த மாதங்கள் அரிசி உற்பத்தி ஆகாத காலங்கள் ஆகும்.

தமிழகத்தில் உணவு நிலை சமாளிக்கக் கூடியதாகவே இருக்கும் இப்போது பொது விநியோகத்தில் இருக்கும் சப்ளையில் பாதிப்பு இராது.

அரிசி கிடைக்கும் இடங்களில் எல்லாம் அரிசியைக் கொள்முதல் செய்ய அரசு தீவிர நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

தமிழக அரசு அதிகாரிகள் அரியானா, பஞ்சாப், உத்திரபிரதேசம்போன்ற மாநிலங்களில் அரிசி வாங்க சென்றுள்ளனர்.

தமிழ்நாட்டிற்கு மத்திய அரசு 5 ஆயிரம் டன் அரிசியையும், 5 ஆயிரம் டன்கோதுமையையும் ஒதுக்கியிருக்கிறது இது முதல்தவணை தான்,

### விலைவாசி உயரவில்லை

அரசு எடுத்துள்ள பல்வேறு தீவிர நடவடிக்கைகளாலும், ஆந்திர மாநிலத்தில் இருந்து அரிசி தாராளமாக வருவதாலும் வெளிச்சந்தை விலைகட்டுக்குள் அடங்கி இருக்கிறது.

குடிநீர்ப் பிரச்னையை சமாளிக்க குடிநீர்திட்டங்களை உடனடியாக நிறைவேற்றுமாறு மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கு உத்திர விடப்பட்டுள்ளது

குடிநீர் பிரச்னையை தீர்க்கதீவிரதிட்டங்களை தீட்டி 10 வார காலத்திற்குள் குடிநீர் வழங்கும்படி உத்தரவிடப்பட்டுள்ளது.

இவ்வாறு சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறினார்.

(4-ம் பத்தித் தொடர்ச்சி)

போன்ற இடங்களில் ஆய்வாளர் மாளிகை உள்ளது. ஆய்வாளர் மாளிகை சீரமைக்க முடியாத அளவிற்கு பழுதுபட்டுள்ளது. இம்மாளிகைவளைவினுள் அனந்தனாறு மேம்பாடுத் திட்ட வேலைக்கான கற்காரை பலகைதயாரிக்கும் மைதானம் நிறுவ திட்டமிடப்பட்டுள்ளது. தாடிக்காரன்கோணம் ஆய்வாளர் மாளிகையும் பயனற்ற நிலையில் உள்ளது. இந்த மாளிகை வனத்துறையிடம் ஒப்படைக்கப்படவிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறினார்.

விளையாட்டில் வசூலாகும் நிதிக்கு

## கேளிக்கை வரி உண்டா?

சென்னை, மார்ச் 14— சட்ட சபையில் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறியதாவது:-

கிரிக்கெட் ஆட்டங்களில் வசூல் ஆகும் தொகை மீது கேளிக்கை வரி விதிக்கப்படுவது குறித்த செயற் குறிப்பை அரசு ஆராய்ந்தது.

விளையாட்டுகளுக்கு ஆதரவு காட்டும் அரசு கொள்கையை பின்பற்றி அவ்வாறு வரிவிதிப்பது இல்லை என அரசு முடிவு செய்தது.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்.





மாதம் ஒன்றுக்கு

# அதிகம் 10 ஆயிரம் மெட்ரிக்டன் மண்எண்ணை தருக

தமிழக அரசு கோரிக்கை

சென்னை, மார்ச் 10. மாதம் ஒன்றுக்கு 10 ஆயிரம் மெட்ரிக்டன் கூடுதல் மண் எண்ணைதரும்படி மத்திய அரசை தமிழக அரசு கோரியுள்ளதாக டாக்டர் நாவலர் கூறினார்.

சட்ட சபையில் கழக உறுப்பினர் தாமரைக்கனி கேள்விக்குப் பதிலளிக்கையில் நிதியமைச்சர் நாவலர் கூறியதாவது:

சேலம் மாவட்டத்தில் 81-ம் ஆண்டில் 2லட்சத்து 51 ஆயிரத்து 931 போலி குடும்பக் கார்டுகள் நீக்கப்பட்டன.

1982-ம் ஆண்டில் வீடு தோறும் சென்று கணக்கெடுப்பு செய்து புதிய குடும்ப அட்டைகள் வழங்கப்பட்டன.

புதிதாக 9 லட்சத்து 43 ஆயிரம் குடும்பக் கார்டுகள் வழங்கப்பட்டன.

அதிலும் 77 போலி குடும்ப கார்டுகள் கண்டு பிடிக்கப்பட்டன.

இவ்வாறு நிதியமைச்சர் நாவலர் கூறினார்.

மேலும் ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் நிதியமைச்சர் நாவலர்கூறியதாவது:

அண்மையில் ஏற்பட்டுள்ள மின் வெட்டு பாதிப்பு காரணமாக மாதமொன்றுக்கு10 ஆயிரம் மெட்ரிக்டன் மண் எண்ணெய்தமிழகத்திற்கு அதிகமாக ஒதுக்குமாறு மாநில அரசு மத்திய அரசைக் கேட்டுக்கொண்டது.

மத்திய அரசு 83 ஜனவரிக்கு 2 ஆயிரம் மெட்ரிக் டன் மண் எண்ணெயைதமிழகத்திற்கு கூடுதலாக ஒதுக்கீடு செய்துள்ளது.

இவ்வாறுநிதியமைச்சர் நாவலர் கூறினார்.

## திருப்பூர் மொய்தீன் மறைவுக்கு இரங்கல் கூட்டம்

சென்னை, மார்ச் 14— முன்னாள் எம். எல். ஏ. திருப்பூர் மொய்தீன் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் கூட்டம் இன்று மாலை திருவல்லிக்கேணி சூரப்பமுதலித் தெருவில் நடக்கிறது.

காஜா மொய்தீன் தலைமையிலும், ஜமால் முகமது முகமது இப்ராகிம், முகமது மன்சூர் ஆகியோர் முன்னிலையிலும் நடக்கும் இக்கூட்டத்தில் அமைச்சர் ராஜாமுகமது பேசுகிறார்.

மற்றும் எம். எஸ். அப்துல்ரகீம், எம்.கே.முஸ்தபா, எம்.ஏ. ரகுமான், ஐதா அலி, அகமதுபஷீர், என். எம். அனீபா என்.எம். முஸ்தபா, வீரை கறீம் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

கடற்படை பயிற்சிக் கழகம் அமைக்க

# நிலம் ஒதுக்கியும் மத்திய அரசு ஒப்புதல் தரவில்லை

அமைச்சர் எஸ். டி. எஸ். தகவல்

சென்னை, மார்ச் 14- கடற்படை பயிற்சிக் கழகம் அமைக்க இடம் ஒதுக்கப்பட்டும் மத்திய அரசிடம் இருந்து எந்தவித பதிலும் வரவில்லை என சட்டசபையில் அமைச்சர் எஸ். டி எஸ். கூறினார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் தேனி ஜெயராமன் கேள்விக்கு பதில் அளிக்கையில், அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறியதாவது:

மத்திய விஞ்ஞானம் மற்றும் தொழிலியல் ஆராய்ச்சிநிறுவனம் கடல் பொறியியல் கட்டுமான ஆராய்ச்சி நிறுவனத்தை தமிழகத்தில் நிறுவ நிலம் கேட்டது.

### இலவச நிலம்

அதையொட்டி செங்கை மாவட்டம் சைதாப்பேட்டை அருகேயுள்ள பள்ளிக்கரணையில் 224.70 ஏக்கர் நிலம் இலவசமாக அளிக்கப்பட்டது.

சென்னையில் கடற்படை பயிற்சிக் கழகம் அமைக்க இடம் கேட்கப்பட்டது.

அதற்காக 944.6 ஏக்கர் நிலம் அளிக்க சென்னையில் உள்ள கடற்படை அதிகாரிக்கு 79-ல் கடிதம் எழுதினோம்.

### பதில் இல்லை

அதன்பிறகுமத்திய அரசு மாநிலத்திற்கு ஒப்புதல் ஏதும் தெரிவிக்காததால் மத்தியபாதுகாப்பு அமைச்சருக்குக் கடிதம் எழுதினோம்.

பிரதமரையும் நேரடியாக முதல்வர் சந்தித்து இதுபற்றி கேட்டார்.

81-ம் ஆண்டு செப்டம்பரிலும் தொடர்ந்து கடிதம் எழுதினோம்.

இருந்தும் மத்திய அரசு பதில் தெரிவிக்கவில்லை,

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

தி.மு.க. மிரட்டல் எதிரொலி:

என்.ஜி.ஓ. விவகாரம் முற்றுகிறது

# புதுவை இ. காங்கிரஸ் தலைவர்கள் டெல்லியில் அவசர ஆலோசனை

பட்ஜெட் கூட்டத் தொடருக்குள் உறவு முறியும்?

பாண்டிச்சேரி, மார்ச் 14- புதுவை மாநிலத்தில் என் ஜி ஓ விவகாரப் பிரச்சினை பூதாகாரமாக எழுந்துள்ளது- தி. மு. க. வினரது மிரட்டலால் தி. மு. க. - இந்திரா காங்கிரஸ் கூட்டு முறியும நிலைக்கு வந்துள்ளது.

தி. மு. க. மிரட்டல்களை சமாளிக்க புதுவை இந்திரா காங்கிரஸ் தலைவர் டெல்லி சென்றுள்ளார்.

புதுவை மாநிலத்தில் என். ஜி. ஓ. விவகாரம் முற்றி வருகிறது.

புதுவை மாநிலத்தில் கடந்த ஆண்டு ஜனவரி மாதம 19-ந் தேதி என். ஜி. ஓ.வினர் பந்த் நடத்தினார்கள்.

இந்த பந்த்தைநடத்தியதற்கு சங்க நிர்வாகிகள் ஒரு மாத சாதாரண சிறை தண்டனை பெற்றனர். இதுதவிர 400 பேர்களது சர்வீஸ் பாதிக்கப்பட்டது.

இவர்கள் மீதுள்ள இந்த தண்டனைகளை வாபஸ் பெறும்படிபுதுவை தி. மு. க. சட்டசபைக் கட்சி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது.

### தி.மு.க. மிரட்டல்

இதே போல ஒரு தீர்மானத்தை புதுவை இந்திரா காங்கிரஸ் சட்டசபை கட்சியும் நிறைவேற்ற வேண்டும் என்று புதுவை திமுகவினர் இந்திரா காங்கிரஸ் மீது கிடுக்கித் தாக்குதல் தொடுத்துள்ளனர்.

இப்படி ஒரு தீர்மானத்தை இந்திரா காங்கிரஸ் சட்டசபை கட்சி நிறைவேற்ற வில்லை. என்றால் உறவு முறியும் என்று மிரட்டியுள்ளதாகவும் கூறப்படுகிறது.

இதன்பிறகு சட்டசபை தி. மு. க. உறுப்பினர்களது கூட்டம் தனியாக சென்னையில் நடந்தது.

தி. மு. க.—இந்திரா காங்கிரஸ் உறவு பற்றி திமுக மறுபரிசீலனை செய்யும் கட்டத்திற்கு வந்திருப்பதாககருணாநிதி மறைமுகமாகத் தெரிவித்தார்.

இந்திரா காங்கிரசை ஒரு இக்கட்டில் மாட்டவே தி.மு.க. தரப்பினர் விரும்புவதாகக் கருதப்படுகிறது.

தி. மு. க. வினர் என். ஜி. ஓ. பிரச்சினையில் இப்படி ஒரு நிலை எடுத்து இருப்பது 'வெறும் அரசியல் ஸ்டண்ட்' என்று இந்திரா காங்கிரஸ்தரப்பினர் பகிரங்கமாக சொல்லி வருகின்றனர்.

இப்படிப்பட்ட அரசியல் ஸ்டண்டுகளை நாங்கள் நம்புவதில்லை என்று புதுவை இந்திரா காங்கிரஸ் தலைவரும் எம்பியுமான பி. சண்முகம் கூறினார்.

### தி.மு.க.ஸ்டண்ட் சந்திக்க காங்கிரஸ் தயார்

தி. மு. க. தரப்பில் விடுக்கப்பட்டுள்ள இந்தப் புதிய பாணத்தைப் பற்றியும், இதனால் ஏற்படும் விளைவுகளை சமாளிக்கவும் புதுவை இந்திரா காங்கிரஸ்தயாராகிவருவதாக சொல்லப்படுகிறது.

மேலிடத் தலைவர்களுடன் இது பற்றி ஆலோசனை நடத்த பி. சண்முகம் எம், பி. யும் அமைச்சர் சவுரி ராஜனும் புது டெல்லி விரைந்துள்ளனர்.

புதுவை விவகாரம் குறித்து மேலிடத்தலைவர்களுடன் இவர்கள் கலந்து ஆலோசிப்பார்கள்.

புதுவை மாநில பட்ஜெட் கூட்டத்தொடர் இம்மாதம் 18-ம் தேதி துவங்குகிறது.

23-ம் தேதி நிதிநிலை அறிக்கை தாக்கல் செய்யப்படுகிறது.

### உறவு முறிவு உறுதி

பட்ஜெட் கூட்டத் தொடர் தொடங்குமுன்பு எப்படியும் தி. மு. க. இ. காங்கிரஸ் கூட்டு உடையும் நிலைக்கு வந்து விடும் என்று அரசியல் பார்வையாளர்கள் கருதுகின்றனர்.

எத்தனை நாள் இந்த எலியும் தவளையும உறவில் இருப்பது? இதை ஒரு முடிவுக்குக் கொண்டு வர உறவை முறிக்கத் தான் வேண்டும் என்று இந்திராகாங்கிரஸ் காரர்கள் வெளிப்படையாக சொல்லி வருகின்றனர்.

புதுவை மாநிலத்தில் அரசு ஊழியர்கள் மீது ஏதாவது வழக்கு இருக்குமானால் அதை ரத்துச் செய்ய அந்த மாநில முதல்வருக்கு அதிகாரம் கிடையாது என்றும் ஒரு தகவல் தெரிவிக்கிறது.

ஆசியாவிலேயே

## மிகப்பெரிய டெலஸ்கோப்: தமிழகத்தில் அமைகிறது-

பெங்களூர், மார்ச் 14— ஆசியாவிலேயேமிகப்பெரிய டெலஸ்கோப் வட ஆற்காடு மாவட்டத்தில் வைக்கப்படுகிறது.

வானிலைஆராய்ச்சிக்கு இது பயன்படும்.

வடஆற்காடு மாவட்டம் வாணியம்பாடி அருகே காவனூரில் வானிலை ஆராய்ச்சி நிலையம் உள்ளது.

இங்கு ரூ 4.50 கோடி செலவில் டெலஸ்கோப் அமைக்கப்பட இருக்கிறது. இது ஆசியாவிலேயே மிகப் பெரியதாகும்.

90 அடி உயர இரும்புக் கோபுரத்தின் மீது இக்கருவி அமைக்கப்படும்.

இந்த ஆண்டு டிசம்பரில் இந்தக் கருவி அமைக்கப்பட்டு விடும்.

ஒரு பொருளை இது 10 ஆயிரம் மடங்கு பெரிதாக காட்டும்.



தலைமைக் கழக அறிக்கை எண் 10/83

## கழகத்தோழர்கள் கவனத்துக்கு...

1972ம் ஆண்டு கழகம் ஆரம்ப காலத்தில் உறுப்பினர்களாகப்பதிவு செய்துகொண்டவர்களில் சிலர் உறுப்பினர்களாக மீண்டும் புதுப்பிக்காமல் விடுபட்டுள்ளார்கள்.

அத்தகையவர்கள் உடனடியாக கழக உறுப்பினர்களாகப் பதிவு செய்து புதுப்பித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஏற்கனவே ஆரம்பகால உறுப்பினர்களாக இருந்ததை உறுதிப்படுத்தும்வகையில் பழைய உறுப்பினர் அட்டை இருந்தால் அதன் எண்ணைக் குறிப்பிட வேண்டும். இல்லையேல் 72ம் ஆண்டு எந்த ஊர் கிளையில் உறுப்பினராகச் சேர்ந்தார் என்பதைத் தெரிவிக்க வேண்டும்.

ப. உ. சண்முகம்
சென்னை—14 பொதுச் செயலாளர்
14-3-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்



தலைமைக் கழக அறிக்கை எண்: 11/83

## தலைமைக் கழக பேச்சாளர்கள் கவனத்துக்கு

தலைமைக் கழக பேச்சாளர்களாகத் தங்களைப் பதிவு செய்து கொண்டுள்ள பேச்சாளர்கள் கொடுத்துள்ள முகவரியிலிருந்து மாற்றங்கள் செய்யநேரிட்டால் புதியமுகவரியை முறைப்படி தலைமைக் கழகத்துக்குத் தெரிவித்துப் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

-ஜெயலலிதா
சென்னை-14 கொள்கை பரப்புச் செயலாளர்
14-3-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்






Published by K, Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.

Editor: E. PARASURAMAN